# பகவத் பாதை

Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2011 / செப்டம்பர் மாத இதழ் | மலர் - 1




Sri Bagavath

நாம் அடைவதற்கு எதுவுமே இல்லை என்பதைப் புரிந்து கொள்வதுதான் ஞானம்.



- ஸ்ரீபகவத்

# நினைவும் சிந்தனையும்

## (Thought and Thinking)

**அன்பர் ஒருவர் பிரச்சினையைக் கூறி தீர்வு கேட்டார்.**

அவர் ஓர் அலுவலகத்தில் பணியாற்றும் ஒரு அலுவலர். ஒருமுறை அவரது அலுவலகத்தில் மூத்த அதிகாரியின் தலைமையில் அலுவலர்கள் கூட்டம் ஒன்று நடந்தது. கூட்டம் நடந்து கொண்டிருந்த நிலையில் அன்பருடைய கைபேசியில் அழைப்பு ஒன்று வந்துள்ளது. கைபேசி ஒலிக்கவும், இந்த அன்பர் அதனை உடனடியாக நிறுத்திவிட்டார். ஆனாலும், மூத்த அதிகாரி இவர் மீது நடவடிக்கை எடுத்துவிட்டார். கைபேசியை அணைத்து வைக்காமல், கூட்டத்தில் எப்படிக் கலந்து கொள்ளலாம் என இவர் மீது குற்றஞ்சுமத்தி இவரை வேறு ஒரு ஊருக்கு மாற்றல் உத்தரவு போட்டுவிட்டார். இவருக்கு மனவேதனை. நடந்ததை நினைத்து தூக்கமில்லாமல் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார். சிறிய தவறுக்கு பெரிய தண்டனை எப்படிக் கொடுக்கலாம் என மனதுக்குள் மறுவிக் கொண்டிருந்தார். மனவேதனை அவருக்கு நீடித்து வந்ததால், நம்மிடம் தீர்வு கேட்டார். அப்போது அவருக்கு அது பற்றி விளக்க நேர்ந்தது.

ஒரு நிகழ்ச்சியானது, நடந்து முடிந்துவிட்டது. அது நமக்குப் பிடிக்காத நிகழ்ச்சியாக இருந்ததால், அதைப்பற்றிய நினைவு (Thought) நம்மையறியாமல் மீண்டும் மீண்டும் வந்து கொண்டிருக்கிறது. நாமாக விரும்பி சிந்திக்கவில்லை. அந்த நினைவு நம்மையறியாமல் நமக்கு ஏற்பட்டு நம்மைத் தாக்கிக் கொண்டிருக்கிறது. அது அப்படி ஏற்பட்டு நமது மன வருத்தத்தைக் கிளறிக் கொண்டிருக்கிறது. ஆனால் இந்த நினைவு நம்மையறியாமல் ஏற்படுவது; நாமாக இந்த நினைவைக் கொண்டு வரவில்லை. இதுதான் நினைவு. இது அதுவாக ஏற்பட்டது. இதுதான் நினவை - இதுதான் (Thought) இதற்கு நாம் பொறுப்பு கிடையாது. இதற்கு நம்முடைய உணர்வுப்பூர்வமான பங்களிப்பு எதுவும் கிடையாது. அந்த நினைவு ஏற்பட்டதும், பிறகு நாமாக அதில் பங்களிக்க ஆரம்பிக்கிறோம். அவர் இப்படி நடந்து கொண்டது சரியில்லை, அவரை விடக்கூடாது - இப்படி நாமாக சிந்தித்துக் கொள்கிறோம். இப்படி நாம் சிந்தனை செய்வதால் நமக்கு மன அழுத்தம் அதிகமாக ஆரம்பிக்கின்றது. இரவில் தூக்கம் வருவதில் சிரமம் ஏற்படுகின்றது. தேவையில்லாமல் அதைப்பற்றியே சிந்திக்கின்றோம். தூக்கம் கெடுகிறதே என்று சிந்திக்கின்றோம். நமது சிந்தனை (Thinking)யில் நமது பங்களிப்பு உள்ளது. நமது (Thought) நினைவில் நம்முடைய பங்களிப்பு கிடையாது. நினைவுகள் அனைத்தும் நம்மையறியாமல் ஏற்படுகின்றன. ஆனால் அப்படி ஏற்படும் நினைவுகள் மற்றும் அவற்றால் ஏற்படும் உணர்வுகளின் ஆயுள் வெறும் அரை வினாடிதான். சிந்தனை அப்படியல்ல. சிந்தனைகளை நாமாக ஏற்படுத்துகின்றோம். நாமாக பங்கேற்றுச் சிந்திப்பதால், நமது சிந்தனையும் உணர்வும் புதுப்பிக்கப்பட்டு விடுகின்றன. தாமாக மறையவேண்டிய நினைவுகளும் உணர்வுகளும் மீண்டும் உயிர் பெற்று விடுகின்றன.

அந்த அன்பருக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை அதிகபட்சமாக இருக்கும் பட்சத்தில், அவர் அதனை சட்ட பூர்வமாக அணுகலாம். மேல் முறையீடு செய்து கொள்ளலாம். அப்படிப் புறச்செயல்களில் ஈடுபடுவது சம்பந்தமாக அவர் சிந்தித்துத்தான் ஆகவேண்டும். செயல் நிமித்தமாக சிந்தனை செய்வதில் தவறு

எதுவும் கிடையாது.

ஆனால் நடந்து முடிந்த ஒன்று இப்படி 'நடந்திருக்கக் கூடாது' என்ற ரீதியில் சிந்தனை செய்வது தேவையற்றது. அதுதான் நமது மனோரீதியான பிரச்சினை களுக்கெல்லாம் காரணமாகிறது. அதைப் பற்றிய நினைவுகள் இயற்கையானது, குற்றமற்றது. அவை தாமாக ஏற்படுகின்றன, நம்மையறியாமல் ஏற்படுகின்றன. தாமாக ஏற்படுபவை அனைத்தும் தாமாக மறைந்துவிடும். ஆரம்பத்தில் ஐந்து நிமிடங்களுக்கு ஒருமுறை ஏற்படலாம். நாம் அதை சிந்தித்தலாக மாற்றாத பட்சத்தில், அதன் வேகம் குறைந்து விடும். பிறகு 10 நிமிடங்களுக்கு ஒரு முறையோ அதன் பிறகு 20 நிமிடங்களுக்கு ஒருமுறையோ ஏற்படலாம். பிறகு சிலமணி நேரங்களுக்கு ஒருமுறையோ, சில நாட்களுக்கு ஒருமுறையோ ஏற்பட்டு அதன்பிறகு அது ஏற்படாமலேயே போய்விடலாம். ஆனால் நாம் அதில் பங்கேற்று அதை சிந்தித்தலாக (Thinking) மாற்றிவிடும் போது அது தாமாக மறையாது. அது ஆத்திரமாகவும் வெளிப்படலாம் அல்லது மாறாத வன்மமாக நம்மிடம் குடியேறிவிடவும் செய்யலாம். அது நினைவாக மட்டும் இருக்கும் பட்சத்தில், அது ஒருபோதும் வன்மமாக மாறாது. உணர்வுகளை விடவும் ஆபத்தானது நமது வன்மங்கள். உணர்வுகள் அனைத்தும் வெளிப்பட்டு மறைந்துவிடும். ஆனால் வன்மங்கள் அனைத்தும் மறைந்திருக்கும் நிலையில் பழிவாங்கத் துடித்திருக்கும்.

ஒருவரை 'விடக்கூடாது' என்று மீண்டும் மீண்டும் சிந்திப்போமானால் அதுவே வன்மமாக நமக்குள் பதிவாகிவிடும். நமக்குப் பாதிப்பை ஏற்படுத்தியவர் மிகப்பெரியவராக இருந்து, அவரைப் பழிவாங்குவது நமக்கு சாத்தியமே இல்லாத பட்சத்தில், நமது வன்மம் நமக்குள் ஒரு அவநம்பிக்கையையும், தாழ்வு மனப்பான்மையையும் ஏற்படுத்தி விடும். நினைவுகளால் நமது இயல்பில் எந்த மாற்றமும் ஏற்படுவதில்லை. ஆனால் உணர்வுப்பூர்வமான நமது சிந்தனையின் (Thinking) காரணமாகவே நமது இயல்பில் மாற்றங்கள் ஏற்படுகின்றன. நமது இயலாமையை நினைத்து மருகும் ஒருவர் மனநோயாளியாகிவிடுகின்றார். துன்பம் கொடுத்த வரை 'விடக்கூடாது, விடக்கூடாது' என்று சிந்தித்துக கொண்டிருப்பவர் குதர்க்கவாதியாகவும், பிரச்சினை மிகுந்தவராகவும், வன்முறையாளராகவும் மாறிவிடுகிறார். புறச்செயல்கள் அனைத்தையும் நாம் சிந்தித்துத்தான் செயல்படுத்த வேண்டும். சிந்திப்பது என்பது நமக்குக் கட்டுப்பட்டது. நினைவு நமக்குக் கட்டுப்பட்டதன்று. புறச் செயல்களைப் பொருத்த அளவில் சிந்திப்பது இன்றியமையாதது. சிந்திக்காதவாறு மனம் போனபடி செயல்படமுடியாது. புறச் செயல்கள் அனைத்தையும் சிந்தித்துத்தான் செயல்படுத்தவேண்டும். புறச்செயல்களைப் பொருத்த அளவில் நல்லது-கெட்டது உண்டு; உயர்ந்தது தாழ்ந்தது உண்டு; செய்ய வேண்டியது, செய்யவேண்டாதது உண்டு. சிந்தித்தலைப் பொருத்த அளவில் இத்தனை வேறுபாடுகளும் உண்டு. அதன் அடிப்படையில் தான் நமது சிந்தித்தல் நிகழவேண்டும். அப்படி நிகழ்ந்தால் தான் நமது செயல்கள் வெற்றிபெறும். அகச் செயலைப் பொருத்த அளவில் நல்லது கெட்டது கிடையாது. உயர்ந்தது தாழ்ந்தது கிடையாது. தேவையானது தேவையற்றது கிடையாது.

நினைவுகள் தாம் அகச்செயல், அவற்றில் இந்தப் பிரிவுகளோ, பாகுபாடுகளோ கிடையாது.

இத்தகைய பிரச்சினை ஒன்றுடன் மருத்துவர் ஒருவர் தனது துணைவியுடன் நம்மைச் சந்தித்தார். அவர்களுக்கு ஒரே குழந்தை, அந்தக்குழந்தை 2 வயதில் இறந்து போய்விட்டது. அது நிகழ்ந்து சில மாதங்களுக்குப்பிறகு நம்மைச் சந்தித்தார்கள். மருத்துவர் கூறினார் "எங்கள் குழந்தை இறந்தது எங்கள் வாழ்க்கையில் நிகழ்ந்த மாபெரும் துயரம். நான் என்னை ஓரளவு நிலைப்படுத்திக் கொண்டேன். ஆனால் எனது மனைவியால் இன்னும் அந்த வேதனையிலிருந்து விடுபடமுடியவில்லை. அது அவருக்கு உடல் ரீதியாகவும், மனோரீதியாகவும், பல பிரச்சினைகளைக் கொண்டு வர ஆரம்பித்துவிட்டது. மனோதத்துவ நிபுணரைச் சந்தித்தும் தீர்வு கிடைக்கவில்லை.

இந்தப் பிரச்சினையை நாங்கள் எப்படி அணுகுவது?" இந்தப் பிரச்சினையிலும், அவர்கள் புரிந்து கொள்ள வேண்டியது "நினைவு என்றால் என்ன, சிந்தித்தல் என்றால் என்ன" என்பது தான். இதுபற்றி அவர்களிடம் உரையாடினோம். "உங்களுடைய குழந்தை இறந்துபோனது மாபெரும் துயரம். அதனால் அதைப்பற்றிய நினைவுகள் மீண்டும் மீண்டும் ஏற்படுவதும், அதனால் துயரமான உணர்வுகள் ஏற்படுவதும் தவிர்க்கமுடியாத ஒன்றுதான். ஆனால் அவை வெறும் நினைவுகளாக மட்டும் இருப்பதில் எந்தப்பிரச்சினையும் கிடையாது. நினைவுகளை, சிந்தித்தலாக மாற்றும்போதுதான் பிரச்சினை. Thinking ஐ Thought-ஆக மாற்றும் போது தான் பிரச்சினை........."உங்கள் வாழ்க்கையில் நிகழ்ந்த துயரமான சம்பவத்தின் நினைவு உங்களுக்குள் உங்களையறியாமல் ஏற்படுகிறது. 'குழந்தையை இழந்தது மாபெரும் இழப்பு. அதைப்பற்றி நினைத்து துயரப்படுவது தானே நியாயமானது. துயரப்படாமல் இருப்பதுதான் நியாயமற்றது' - இப்படி நாம் நமது நினைவுகளை நியாயப்படுத்துகிறோம்.

அப்படி நியாயப்படுத்துவதன் மூலம், நாம் நமது நினைவுகளை சிந்தித்தலாக மாற்றிவிடுகிறோம். Thought ஐ Thinking-ஆக மாற்றி விடுகிறோம். "இதனால் தாமாக ஏற்பட்ட நினைவுகளில், நாமாக முன்வந்து பங்குபெற ஆரம்பிக்கின்றோம். நம்முடைய துயரத்தை நாமே மனமுவந்து ஏற்றுக் கொள்ளகிறோம். ஆனால் அந்தத்துயரத்தையும் நம்மால் தாங்க முடியவில்லை. இதயத்துடிப்பு அதிகமானது நம்மை பயமுறுத்துகின்றது. எந்த நேரத்திலும் மயக்கம் ஏற்பட்டுவிடலாம் எந்த நேரத்திலும் மனமுறிவு ஏற்பட்டுவிடலாம் என சிந்திக்கின்றோம். இதனால் நமது நினைவுகள் யாவும் சிந்தித்தலாக மாறிவிடுகின்றன.

Thought அனைத்தும் Thinking-ஆக மாறிவிடுகின்றன.

நினைவுகள்-Thoughts - தாமாக ஏற்படுகின்றன. தாமாக ஏற்பட்டவை தாமாக மறைந்து விடுகின்றன. நினைவுகளும் அவற்றால் ஏற்படும் துயர உணர்வுகளும் தாமாக ஏற்பட்டு, தாமாக மறைந்துவிடுகின்றன. அவற்றைச்சீரமைக்க நமது முயற்சி எதுவும் தேவையில்லை. அவை சிந்தித்தலாக Thinkingஆக மாறும் போதுதான் பலம் பெறுகின்றன. அவற்றைச் சீரமைக்கப் போராடி நாம் தோற்கும் போது அவை மன அழுத்தமாக நமக்குள் பதிவாகி விடுகின்றன் மனோவியாதியாக மாறிவிடுகின்றன.

நினைவையும், சிந்தனையையும் (Thought and Thinking) நாம் புரிந்து கொண்டு, நினைவுகளில் குறுக்கிடத் தேவையில்லை என்பதைப் புரிந்து கொள்ளும்போது

-அனைத்துத் தீர்வுகளும் தாமாக ஏற்படுகின்றன.

## ஸ்ரீபகவத்

தமது 18 வயது முதல் ஆன்மீகத் தேடலில் ஈடுபட்டு, தியானங்கள், பயிற்சிகள் மூலம் ஞானத்தை அடைய முயற்சி செய்தவர். பழைய ஆன்மீக நூல்கள் முதல் ஜே.கே, ஓஷோ, இரமணர் போன்றோர்களின் நூல்களைக் கற்றவர். ஆயினும் அவர் ஞானம் அடையமுடியவில்லை. தமது 58வது வயதில் ஒரு நாள் திடீரென்று ஞானத் தெளிவு பெற்றார்.40வருட பயிற்சிகள் மற்றும் தியானங்களின் மூலம் பெறமுடியாத ஞானத்தை "புதிய வழியில்" அடைந்திருக்கிறோம் என்பதை உணர்ந்து கொண்டார். தாம் உணர்ந்த எளிய வழியை, மனிதகுலம் பயன்பெறும் வகையில் விளக்கிவருகிறார். ஒவ்வொருவரையும் ஞானியாக்க வேண்டும் என்ற தணியாத தாகம்கொண்டு, நூல்கள் பல எழுதியுள்ளார் கூட்டங்களிலும், கலந்துரையாடல்களிலும் ஈடுபட்டு வருகிறார்."ஞானம்" என்னும் "தெளிவு முடிச்சு" ஏற்பட்டால் ஏற்பட்டது தான் என்று கூறும் இவர், தியானத்தின் பயன்கள் என்ன, எல்லை என்ன என்பதையும், "ஆத்ம சாட்சாத்காரம்" என்பதன் உண்மை நிலை என்ன என்பதையும், "துரிய நிலை" என்றால் என்ன என்பதையும் எளிமையாக விளக்குகிறார்.

நாம் ஞானம் பெறத் தடையாய் இருக்கும் நம் கற்பனைகளை, நாம் சேர்த்து வைத்துள்ள தடைகளை உடைத்தெறிகிறார். இவரால் ஞானம் பெற்றவர்கள் பலர். நாள் தோறும் ஞானம் பெற்று வருபவர்கள் பலர். உலகிற்கே வழிகாட்டியாக வளர்ந்து வரும் இவர் மூலம் உலகமே ஞான வளாகமாக மாறப்போவது உறுதி.

## ஸ்ரீ பகவத் மிஷன்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் தெளிவு பெற்றவர்களின் அடுத்த செயல்பாடு என்ன என்ற கேள்வி, தெளிவடைந்த அனைவருக்கும் எழுந்த நிலையில், அதன் விளைவாக உருவாகி அமைந்ததுதான் ஸ்ரீ பகவத் மிஷன். தெளிவடைந்த அனைவரும் இதன் உறுப்பினர்கள்தாம். நம் அனைவருக்கும் உள்ள ஒரே ஒரு பொதுக்கடமை என்னவென்றால், "நாம் பெற்ற நன்மையை உலகமும் பெற வேண்டும்: நாம் அடைந்த ஞான விடுதலையை உலகத்தவரும் பெறவேண்டும்."ஐயா அவர்களின் ஞானத்தைப் பெற தகுதியுடைய பலர் உலகம் முழுவதும் விரவிக்கிடக்கின்றார்கள்.

தேவையான தகவல், தேவையான வழிகாட்டல் கிடைக்காத காரணத்தினாலேயே, அவர் பெற வேண்டிய ஞானமும், விடுதலையும், அவர்களை அடைந்திடுவதில் அவர்களை அடைந்திடுவதில் தாமதம் ஏற்படுகிறது. அவற்றை உரியவர்களுக்குக் கொண்டு செல்லும் சக்தி நம்மில் பலருக்கு இருக்கலாம். நாம் இணைந்து செயல்படும்போது, இந்தப் பணி எளிதாக நிறைவேறும். நம்மை இணைக்கும் பாலமாக அமைந்துள்ளது தான் ஸ்ரீ பகவத் மிஷன்.

அகவிடுதலையே நமது அமைப்பின் பிரதான நோக்கமாக இருந்தாலும், நாம் இணைந்த நிலையில், நம்மால் சாத்தியப்படும் சமுதாயப் பணிகளையும், உதவிகளையும் மத–இன வேறுபாடின்றி தேவைப்படுவர்களுக்கு வழங்குவதையும் நோக்கமாகக் கொண்டு அமைந்துள்ளதுதான் இந்த மிஷன். நீங்கள் பெற்ற பலனை, பகிர்ந்து கொள்பவராகவோ அல்லது பலன் பெற்றிட விரும்புவோராகவோ நீங்கள் இந்த அமைப்பில் இணைந்து கொள்ளலாம்.




**செய்திகள் : திருவண்ணாமலை**

★அய்யா அவர்கள் 12–9–2011 முதல் திருவண்ணாமலையில் தங்கியிருந்து அன்பர்களைச் சந்திக்க இருக்கிறார்கள்.
முகவரி : 108/21, செங்கம் ரோடு, (யோகிராம் சூரத்குமார் ஆசிரமம் மற்றும் அரசு கலைக் கல்லூரிக்கு பின்புறம்)
T.S.R. நகர், திருவண்ணாமலை–606 603. செல் : 99442 15677

## ஆசிரியர் பகுதி

இதுதான் நமது முதலாவது இதழ். உங்கள் அனைவரையும் ஸ்ரீ பகவத் சார்பிலும், "பகவத் பாதை" மாத இதழ் சார்பிலும் வருக, வருக என்று வரவேற்கிறோம். நாம் என்ன செய்யப்போகிறோம்? எதற்காக இந்த மாத இதழை ஆரம்பித்துளோம்? உண்மையைக் கூறவேண்டுமென்றால், எதற்காக இந்த இதழை ஆரம்பித்துள்ளோம் என்பதே நமக்கு தெரியாது.

நாம் அனைவரும் ஒருவரோடோருவர் உறவு கொள்ளும் வகைக்காக இந்த இதழ் ஆரம்பிக்கப்பட்டிருந்தாலும், பல மகத்தான பணியை நமது இதழ் மேற்கொள்ளப்போகிறது என்றுதான் நமது உள்ளுணர்வு கூறுகின்றது. அது என்ன பணி என்பதை போகப்போகத்தான் நாம் பார்க்கப்போகிறோம். இந்த இதழ் ஸ்ரீ பகவத் மிஷனுக்கு மட்டுமோ, பகவத் பாதையின் ஆசிரியர் குழுவுக்கு மட்டுமோ சொந்தமானதல்ல. நம் அனைவருக்குமே சொந்தமானது. நிர்வாக வசதிக்காக மட்டுமே ஆசிரியர் முன்னிலைப்படுத்தபட்டுள்ளார்.

நாம் அனைவரும் சேர்ந்து இந்தப் பயணத்தைத் துவங்கியுள்ளோம். நமது பயணத்தில் நாம் எண்ணற்ற வினோதங்களைச் சந்திக்கப்போகிறோம். நமது பயணம் இந்த உலகத்துக்கே ஒளிகொடுக்கும் வெற்றிப் பயணமாக அமைந்திடும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. நம்மை நாமே வாழ்த்திக்கொண்டு நன்மைகளை நோக்கி நாம் பயணிப்போமாக.

– ஆசிரியர்

## குறிப்புகள்

**கேள்வி பதில் பகுதிக்காக வாசகர்களிடமிருந்து கேள்விகளை வரவேற்கிறோம்.**

**உங்கள் நண்பர்களுக்கு பரிசளிக்கும் விதமாக இம் மாத இதழை, மாதந்தோறும் பெற்றிட முகவரியை SMS மூலமாக பதிவு செய்யலாம்.**
Cell: 97891 65555

**நீங்கள் இம்மாத இதழை மாதந்தோறும் உங்களின் email மூலம் பெறுவதற்க்கு உங்கள் email ID, தொலைப்பேசி எண், அலைப்பேசி எண் மற்றும் வீட்டு முகவரியையும் பதிவு செய்வது அவசியம்.**
bagavathpathmonthlymagazine@gmail.com

### ஸ்ரீபகவத் மிஷன் பற்றிய விபரங்களுக்கு

| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |
|---|---|---|
| **Dr.N. கைலாசம்,** | திரு. **V.A.P. சரவணன்,** | திரு. **K.S. ஜீவமணி,** |
| செல் : 94432 90559 | செல் : 99942 05880 | செல் : 97891 65555 |

## ? கேள்வி பதில்

கே: தியானம், யோகா என்று பலரும் பயிற்சி செய்கிறார்கள். அதனால் கிடைக்கும் முக்திநிலையும், நீங்கள் கூறும் முக்தி நிலையும் ஒன்று தானா?

ப : தியானம், யோகா ஆகியவை எல்லாம் அனுபவங்களை மட்டுமே கொடுக்கும். தண்ணீர் இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அதனைப் பனிக்கட்டியாக மாற்ற முடியும். பனிக்கட்டி என்பது தண்ணீரின் இயல்பான நிலையல்ல. திரவ நிலைதான் தண்ணீரின் சொந்த நிலையாகும். பனிகட்டியாக மாறும்போது அது ஒரு வடிவத்தை எடுத்து விடுகிறது. எந்த பாத்திரத்தில் அந்தத் தண்ணீரை ஊற்றி அதனைக் குளிர்விக்கிறோமோ, அந்த பாத்திரத்தின் வடிவில் அது, பனிகட்டியாகிவிடுகிறது. நாம் திரவ நிலையில் இருந்தாலும் கூட, நாம் பாத்திரத்தினுல் இடம் பெறும்போது, பாத்திரவடிவுக்கு மாறிவிடத்தான் செய்கிறோம். ஆனால், நாம் பனிக்கட்டியாக மாறாத வரை பாததிரத்தின் வடிவை நாம் நிரந்தரமாக தக்க வைத்துக் கொள்வது இல்லை. டம்ளரில் இருந்தால் நாம் டம்ளர் வடிவில் மாறி விடுகிறோம். அதுவே உறை நிலைக்கு வந்து விட்டது என்றால், அந்த இடத்தையே, அந்த வடிவத்தையே பிடித்துவைத்துக்கொள்ளும். தண்ணீராக மாறும்வரை அந்த நிலையிலேதான் இருக்க வேண்டியது இருக்கும். நாம் பயிற்சி முயற்சிகளில் ஈடுபடும் போது, நமது மனது ஒருவகையில் டியூன் செய்யப்பட்டு விடுகிறது. நாம் ஒரு வடிவைப் பெற்றுவிடுகிறோம். அது நிரந்தரமான தீர்வு அல்ல. தற்காலிகமான தீர்வையே கொடுக்கும். ஆனால் நாம் திரவ தன்மையில் இருந்தால் நிரந்தரமான தீர்வு நமக்குக் கிடைத்துவிடுகிறது. நமக்கென்று நிரந்தரமான ஒரு நிலை கிடையாது. சூழ்நிலைக்கேற்ப நாம் ஒரு பாத்திரமாக மாறிவிடுகிறோம். பனிகட்டி போன்ற உறை நிலை என்பது சில அனுபவங்களோடு தங்கியிருப்பது போன்றது. அது ஆரம்ப கால சாதகனுக்கு உதவியாக இருக்கும். ஆனால், காலப்போக்கில் அது சரியானதல்ல. பனிகட்டி நிலையிலிருந்து, திரவ நிலைக்கு வந்து விட வேண்டும் அதுதான் விடுபட்ட நிலை.

– ஸ்ரீபகவத்

**வேண்டுகோள் :**

- நம் அனைவருடைய தொலைபேசி, அலைபேசி எண்கள் மற்றும் இ.மெயில் முகவரிகள் பதிவு செய்ய அவற்றை SMS மூலாமாகவோ,தபால் மூலாமாகவோ, அல்லது இ.மெயில் மூலமாகவோ தெரிவிக்க வேண்டுகிறோம்.
- இந்த இதழக்கு தேவையான கட்டுரைகள் மற்றும் தகவல்களை அனுப்ப வேண்டுகிறோம்.

## ஜென் கதை

# கோபம் கொண்ட தாய்ப்பறவை

அது ஒரு மலை முகடு. அந்த முகட்டை ஒட்டி, பாதாளம் போன்று பள்ளம். அந்தப் பாதாளத்தில் ஆறு ஒன்று ஓடிக் கொண்டிருந்தது. அந்த ஆற்றைக் கூட சரியாகக் காண முடியாத வகையில் அப்படி ஒரு அதலபாதாளம். அந்த மலை முகட்டில் வானளாவி நின்று கொண்டிருந்தது ஒரு பிரம்மாண்டமான மரம். அந்த மரத்தின் உயர்ந்த கிளையொன்றில் கூடு கட்டி, தன்னுடைய குஞ்சுப் பறவை ஒன்றுடன் வசித்து வந்தது தாய்ப்பறவை. தாய்ப் பறவை, எங்கெங்கோ சென்று உணவைத் தேடிக் கொண்டு வந்து, குஞ்சுப் பறவைக்கு ஊட்டி வந்தது. பசிக்கும் போதெல்லாம், அந்தக் குஞ்சுப் பறவை கீச்சிட்டு சப்தம் செய்து, தாய்ப்பறவையைத் தொந்தரவு செய்யும். தாய்ப் பறவையும் தாமதிக்காது வெளியே சென்று, தகுந்த இரையுடன் திரும்பும். அதுமட்டுமல்ல. மற்ற நேரத்தில் கூட அந்தத் தாய்ப்பறவை, அந்தக் குஞ்சுக்குக் காவலாய் இருக்கும். வேறு எந்தப் பறவையோ, அல்லது மரத்தில் ஏறக் கூடிய ஜந்துக்களோ எந்தத் தொந்தரவையும் கொடுக்காத வகையில், அந்தத் தாய்ப் பறவையே காவல் காத்து வந்தது. அது எங்கு பறந்து சென்றாலும், அதன் கவனம் அந்தக் கூட்டிலிருக்கும் குஞ்சின் மீதே இருக்கும். அந்தக்குஞ்சு மகிழ்வுடன் சாப்பிட்டு நன்றாக வளர்ந்து விட்டது. ஆனால் திடீரென்று ஒரு நாள், அந்தத் தாய்ப் பறவைக்கு ஆவேசம் ஏற்பட்டு விட்டது. அது தன்னுடைய அலகால் குஞ்சுப் பறவையைக் கொத்தி கூட்டிலிருந்து விரட்டியது. அந்தக் குஞ்சு அதிர்ச்சியடைந்து அலறியது. எவரிடம் அடைக்கலம் தேடுவது? அடைக்கலம் கொடுத்த தாய்ப் பறவையே அலகால் இப்படிக் கொத்தி விரட்டுகிறது. கொத்தாதே, கொத்தாதே என்று தாய்ப் பறவையிடமே மன்றாடியது. ஆனால் தாய்ப் பறவை அதனைக் கண்டு கொள்ளவில்லை. கொத்தி விரட்டியது அந்தக் கூடு தாய்ப் பறவைக்கு தேவைப் படுகிறதோ? அதுதான் விரட்டுகிறதோ? குஞ்சுப் பறவை கூட்டிலிருந்து வெளியே குதித்து மரக்கிளைக்கு வந்து விட்டது. ஆனால் தாய்ப் பறவை அங்கேயும் தங்க விடவில்லை. அங்கிருந்தும் விரட்டியது. கொத்தித் துரத்தியதுஅந்தக் குஞ்சும், ஒரு கிளையிலிருந்து குதித்து அடுத்த கிளைக்கு வந்தது. தாய்ப் பறவை அப்படியும் விடவில்லை. மீண்டும் துரத்தியது. இப்படி ஒவ்வொரு கிளையாகக் கடந்து, இறுதியில் அந்தக் கடைசிக் கிளைக்கே வந்து விட்டது. இனி குதித்துத் தப்பிச் செல்ல வேறு கிளையே கிடையாது. அந்தக் கிளையிலிருந்து குதித்தால், அந்த அதல பாதாளத்தில் தான் விழ வேண்டும்.

பகலிலேயே இருளாகத் தெரியும் அந்தப் பாதாளத்தையும், அதில் ஓடிக் கொண்டிருக்கும் ஆற்றையும் பார்த்தாலே அந்தக் குஞ்சுப்பறவைக்கு உடலெல்லாம் நடுங்கி விடும். சில தினங்களுக்கு முன்னால் அந்த மரத்தில் தாவி விளையாடிய குரங்குகளில் ஒன்று அந்தப்பாதாளத்தில் தவறி விழுந்து, அதன் கண் முன்னாலேயே இறந்துபோய் விட்டது. தாய்ப் பறவை விடவில்லை. மீண்டும் கொத்தி விரட்டியது. குஞ்சுக்கும் தப்பிச்செல்ல வேறு இடமே இல்லை. பாதாளத்தில் குதிக்க அது தயாராக இல்லை. " ஐயோ அம்மா, என்னைக் கொன்று விடாதே! " என்று கத்திக்கதறியவாறே அது தன் கால்களால் அந்தக்கிளையை இறுகப் பற்றிக்கொண்டு விட்டது. தாய்ப்பறவை எவ்வளவு கொத்தியும் அது தன் பிடியை விடவில்லை. விட்டு விட்டால் அதன் வாழ்க்கை அந்த அதல பாதாளத்தில் அத்துடன் முடிந்து போய் விடும். அதனால் அது வலியைப் பொறுத்துக்கொண்டு, கிளையை இறுகப் பிடித்துக் கொண்டது. ஆனால் தாய்ப்பறவை விடவில்லை. தூரத்திலிருந்து பாய்ந்து வந்து அந்தக் குஞ்சுப் பறவையின் மீது முழு பலத்துடன் மோதித்தள்ளியது. அவ்வளவுதான். குஞ்சுப் பறவையின் பிடி நழுவி, அது அந்த அதல பாதாளத்துக்குள் விழுந்தது.அந்த குஞ்சுப் பறவை "அய்யோ, அம்மா " என்று அலறியது. பிடிப்பதற்கு ஏதாவது கிடைக்குமா என்று கால்களால் அடித்துக் கொண்டது. அப்போதுதான் அந்த அதிசயம் நிகழ்ந்தது. அந்தக் குஞ்சுப் பறவையின் பக்கவாட்டிலிருந்த இரண்டு இறகுகள் தாமாக நீண்டு விரிந்தன. அந்த இறகுகளைக் கொண்டு எதையாவது பிடித்துக் கொள்ள முடியுமா என்று இறகுகளை அடித்துப் பார்த்தது.ஆனால் என்ன ஆச்சரியம், அந்த குஞ்சுப்பறவையாலும், அதன் தாயைப் போல பறக்க முடிந்தது. அது உற்சாகமாக சத்தமிட்டுக்கொண்டே அந்தப் பாதாளத்தையும், அந்த மலை முகட்டையும் சுற்றி வட்டமடிக்க ஆரம்பித்தது. அந்த தாய்ப் பறவையும் 'சபாஷ்' என்று பாராட்டும் வகையில் குரல் கொடுத்தவாறு, அதன் பக்கவாட்டிலேயே பறந்து வந்தது. அவை இரண்டும் மகிழ்ச்சியைப் பரிமாறிக் கொண்டு அங்குமிங்கும் வட்டமடித்தன. அதல பாதாளமெல்லாம், இப்போது ஒரு சறுக்கி விளையாடும் கூடமாகவே தோன்றியது.





விளம்பரங்களை வரவேற்கிறோம்.

## கவிஞர் புவியரசு பார்வையில் , , , பகவத் அய்யா அவர்கள்

இருபத்தோறாம் நூற்றாண்டில் ஞானத்தாகம் கொண்ட அனைவருக்கும் கிடைத்திருக்கும் பெரும் பொக்கிஷம் அய்யா அவர்கள். அடையாளம் கண்டு கொள்கிறவர்கள் பாக்கியவான்கள். அடையாளம் கண்டு கொள்வதற்கு தாகம் வேண்டும். தாகம் கொண்டவர்களே தகுதி படைத்தவர்கள். அவர்களுடைய தாகத்திற்கே தண்ணீர் கிடைக்கும். அதுவே "தீர்த்தம்" ஆகும். அந்த அனுபவமே "தீர்த்தாடனம்" ஆகும். ஐயா அவர்கள் நாம் கண்டு கொண்டிருக்கும் "ஆள் தெய்வங்களி"லிருந்து முற்றிலும் மாறுபட்டவர். இல்லறத் துறவியாய்த் திகழ்பவர். வாழையடி வாழையாய் வாழ்ந்து வந்த ஞானியரிடம் பெரும் மரியாதை வைத்து, அவர்கள் செய்த ஞானப் பணியைப் பாராட்டிவருபவர். மகான்களான ரமணர், ஓஷோ, ஜே.கிருஷ்ணமூர்த்தி, போன்றவர்களை மதித்து நினைவுகூர்பவர். நமது காலத்துப் பிரபல சந்நியாசிகள் தமது ஞான குருக்களின் பெயரைக் கூட உச்சரிக்காத குருத்துரோகிகளாக உலாவரும்போது, பகவத் ஐயா அவர்கள் தமது குருவான தேனி சுவாமிகளை நம்முடன் வாழும் மகான் ரமணர் என்று எம்மிடமெல்லாம் சொல்லிவருபவர். உலகமே, தியான வகுப்புகளுக்கும், யோகப் பயிற்சிகளுக்கும் பெருந்தொகை செலவழித்து அலையாய் அலையும் இந்தக்காலத்தில் ஞானம் என்பது மிகவும் எளிமையானது; கண நேரத்தில் எவரும் ஞான மடைதல் சாத்தியம்; "தியானத்தை விடு ஞானத்தைப்பெறு" "சும்மா இரு" என்றெல்லாம் சொல்வதற்கு அசாத்திய துணிச்சல் வேண்டும். இவ்வகை அதிர்ச்சிதரும் மெய்மைகளை, ஆராவாரமின்றி அமைதியாகச் சொல்லி நம்மை உயரத்தில் ஏற்றிவைக்கும் மகா ஞானி அய்யா அவர்கள். அய்யா அவர்களின் அருள் வட்டததிற்குள் விளிம்பிலேனும் இருக்கும் பேறு எனக்கு கிடைத்திருக்கின்றது. இனி எனக்கு எவரும் தேவையில்லையென்ற மன நிறைவு,ம் ஏற்பட்டிருக்கின்றது. இந்த பகவத் பாதையின் அனுபவம் ஓர் அரிய எளிய வழிகாட்டி. மெல்ல மெல்ல அந்த பாதையில் நாமும் பயணம் புறப்படுகிறோம். போகுமிடமோ, இடம், காலம் கடந்தது. எல்லாவற்றுக்கும் மேலாகக் கிடைப்பது ஆழ்ந்த அமைதி. இந்த அமைதி அலையலையாய் எந்த சூழலையும் தன் வயமாக்கிக் கொள்ளவல்லது, அய்யா உரையாடல்களை விட, அவருடைய "சாந்நித்யம்" மட்டுமே போதுமானது என்பது எனது அனுபவ உண்மை. அடுத்த முறை ஐயா அவர்களுடன் இருக்க நேர்ந்தால் நீங்கள் இதை உணரலாம். அந்த இயல்பான இருப்பே இன்ப மயமானது. விடுதலை அடையவே சகல மனிதரும் விரும்புகிறார்கள். நாடு, சமூகம், தனமனிதர் என அனைவரின் தேட்டமும், திட்டமும் அதுவாகவே இருக்கையில் அய்யா அவர்கள் சொல்வது இது"விடுதலை என்பது எதையுமே அடையாதிருப்பது" இந்த அதிர்வுடன் இந்த பகவத் பாதையின் பயணத்திற்குத் தயாராகும்படி அன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

-கவிஞர் புவியரசு

நன்றியுடன் சூன்யப் பிரவாகம் - நூலில் இருந்து




தொடர்பு முகவரி:

**ஸ்ரீபகவத் மிஷன்**

**மற்றும் ப்ரவாகம் பப்பளிகேஷனஸ்**

*31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை,*

*சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா.*

தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

இணையதளம்: www.pravaagam.org

www.sribagavath.org

இமெயில்: sribagavathji.gmail.com





* இந்த இதழுக்கான செலவுகளை எதிர்கொள்ள ரூ. 100/– நன்கொடை வழங்க அன்புடன் வேண்டுகிறோம்.


"Bagavath Pathai"-Monthly Magazine.

Editor: Sri. **A.Senthilnathan.** cell:99421 81933

Published on behalf of Sri Bagavath Mission by

Sri. **A.R. Ravishankar.** Cell: 98943 77433